SARATHA READING SERIES:

BOOK III FOR CLASS III.

சாரதா நவீன

# மூன்றும் பாடம்.

(மூன்றும் வகுப்பு.)



PUBLISHED BY

T. N. SUBBIAH & SONS,
Book-Sellers & Publishers,
TANJORE.

[...rved.] 1928. [விலை $3\frac{1}{2}$ அணா.

SARATHA READING SERIES.

BOOK III FOR CLASS III.

சாரதா நவீன

# மூன்றும் பாடம்.

(மூன்றும் வகுப்பு.)



---

BY

T. N. SUBBIAH VASTAD,

*Late Assistant,*

*Veeraraghava's Secondary School, Tanjore.*





PUBLISHED BY

**T. N. SUBBIAH & SONS,**

Book-Sellers & Publishers,

TANJORE.

---

1928.



*[Price 3½ Annas.*

# பொருளடக்கம்.



## 1. அரசர்.

---

அரசரின் படம் இதோ பாருங்கள். இவர் தான் நம்மை ஆளுபவர். ஐந்தாவது ஜார்ஜ் என்பது இவருடைய பெயர். இவர் தந்தையின்

பெயர் ஏழாவது எட்வர்ட். இவருடைய பாட்டியார் பெயர் விக்டோரியா மகாராணியார். இவர் 1865ஞு ஜூன்மீ 3உ பிறந்தவர். இது எந்த வருடம்? இவருக்கு இப்போது என்ன வயது? கணக்கிட்டுப்பாருங்கள்.

நமது மன்னரின் மனைவியார் மேரிமகாராணியார். நமது மன்னரின் மூத்த குமாரர் நமக்கு இளவரசர். அவருக்கு வேல்ஸ் இளவரசர் என்று பெயர்.

நமது மன்னரின் கீழ் அநேக சிற்றரசர்கள் இருக்கிறார்கள். ஆகையால் நமது மன்னருக்கு இராஜாதி ராஜர் அல்லது சக்கரவர்த்தி என்று பெயர். இவர் தமது மனைவி மக்களுடன் லண்டன் நகரத்தில் வசிக்கிறார். லண்டன் இங்கிலாந்து தேசத்தில் உள்ள ஒரு பெரிய பட்டினம். நமது மன்னருக்கு உலகம் எங்கும் நாடுகள் உள. நமது சக்கரவர்த்தி இருமுறை நமது தேசத்திற்கு விஜயம் செய்திருக்கிறார். அவர் இளவரசராய் இருந்தபோது ஒரு தடவை இங்கு வந்திருக்கிறார். பட்டத்திற்கு வந்தபிறகு

இந்தியாவிற்கு வந்து டில்லி நகரத்தில் 1911௵ டிஸம்பர்மீ 12௳ பட்டம் கட்டிக்கொண்டார்.

ஜார்ஜ் மன்னர் மிக நல்லவர். உத்தம குண முடையவர்; இவர் போர் செய்வதில் வெகு சமர்த்தர்; எப்போதும் தன் குடிகளின் நன்மையையே நாடுபவர். இவருக்கு இந்தியரின் மீது வெகு பிரியம். அரசர் வாழ நாமும் வாழ்வோம். நாம் அரசருடைய ஆணைக்கு அடங்க வேண்டும். அவருடையவும் அவர் குடும்பத்தாருடையவு மான க்ஷேமத்தை நாடல்வேண்டும்.

"ஈசன் அரசரைக் காக்க."

---

## 2. பரசுராமர்.

---

முன் ஒருகாலத்தில் ஜமதக்கினி என்ற ஓர் முனிவர் இருந்தார். அவர் ஒரு மகான். அவருடைய தவப் பயனால் அவருக்கு ஒரு நல்ல புத்திரன் அவதரித்தான். அப்புத்திரன் பெயர் பரசுராமர் என்பது.



ஜமதக்கினி முனிவரிடத்தில் காமதேனு இருந்தது. அது உடல் பசுவடிவமும் தலை மனித வடிவமும் உள்ள ஒரு பிராணி. அக் காலத்தில் அரசு செலுத்தி வந்த கிருதவீரியன் என்னும் அரசன் அக்காமதேனுமேல் ஆசை கொண்டு தன்னிடம் அதைக் கொடுக்கும்படி அவரைக் கேட்டான். முனிவர் அதைக் கொடுக்க மறுத்தார். அரசன் கோபங்கொண்டு முனிவரின் தலையைக் கொய்து அக்காமதேனுவைக் கைப்பற்றினன்.

இச்செய்தி முனிவரின் குமாரரான பரசு ராமருக்குத் தெரிந்தது. அவர் அரசன் மீது சீற்றங்கொண்டு "நான் க்ஷத்திரியர்களை யெல் லாம் கொன்று அவர்களுடைய இரத்தத்தை ஒரு மடுவாகத் தேக்குவேன்" என்று ஒரு பெரிய சபதம் செய்து கொண்டார். பிறகு, அரசனை கிருதவீரியனுடன் போர் செய்து அவனைக் கொன்றார். கிருதவீரியனுக்குக் கார்த்தவீரியார்ச் சுனன் என்ற ஒரு குமாரன் இருந்தான். அவன் பரசுராமரை எதிர்த்தான். அவனையும் பரசுராமர் கொன்றார். பரசுராமர் மற்றும் பல க்ஷத்திரியர்களை நாசம் செய்துவிட்டு வடக்கிலுள்ள ஒரு பெரிய மலையில் தவஞ்செய்ய ஆரம்பித்தார்.

அக்காலத்தில் வடதேசத்தில் ஜனகர் என் னும் மன்னர் ஒருவர் ஆண்டு வந்தார். அவரு டைய புத்திரி சீதை. அம்மகாராஜனிடத்தில் ஒரு பெரிய வில் இருந்தது. அதை வளைக்க ஒருவ ராலும் முடியவில்லை. அவ்வில்லை எடுத்து வளைக் கும் அரசனுக்குச் சீதையை மணம் செய்விப்ப தாக ஜனகர் விளம்பரம் செய்தார். பல அரசர் கள் வந்து வில்லை வளைக்க முயன்றும் ஒருவ

ராலும் முடியவில்லை. கடைசியில் வந்த தசரத குமாரரான இராமர் வில்லை வெகு அலக்ஷியமாய் எடுத்து வளைக்கும்போது அவ்வில் மளுக்கென்று ஒடிந்தது. ஜனகர் சந்தோஷங்கொண்டு சீதை யை இராமருக்கு மணம் செய்வித்தார்.

இராமர் வில்லை முறித்த செய்தி பரசுராம ருக்குத் தெரிந்தது. உடனே அவர் இராமர் முன் வந்து "அடே! க்ஷத்திரியா! நீ முறித்தவில் பழையவில். இதோ இருக்கும் எனது வில்லை எடுத்துவளை. இல்லாவிடில் என்னுடன் போ ருக்குவா," என்று கூறினர். இராமர் அவ் வில்லை எடுத்து ஒரு நொடியில் வளைக்க பரசு ராமர் மகிழ்வுற்றார். மறுபடியும் அவர் மலைக்குச் சென்று தவஞ்செய்து கொண்டிருந்தார். அவ ருக்கு இறப்பு இல்லை யென்றும் அவர் தெய்வத் தன்மை உடையவரென்றும் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

---




# 3. யானை.

---

இப்பூமியின்கண் உள்ள மிருகங்கள் எல்லாவற்றினும் மிகப்பெரியது யானை. உயரத்திலும் பருமனிலும் இதை நிகர்த்த வேறு மிருகம் கிடையாது. இது காடுகளில் வசிக்கும் மிருகங்களில் ஒன்று.

யானைக்குத் தலை மிகப்பெரிது. கண்கள் மிகச் சிறியவை. காதுகள் வெகு அகலமானவை.

கழுத்து மிகவும் குட்டை. கால்கள் தூண்போல் பருத்தவை. மேல் தோல் வெகு அழுத்தமாய் இருக்கும். வாலில் அதிகமயிர் இல்லை. இதன் மூக்கு வெகு நீளமாய்த் தொங்கும். இந்நீளமான மூக்கிற்குத் துதிக்கை யென்று பெயர். துதிக்கை யின் நுனியில் ஒரு விரல் உண்டு. அது அவ்விரலால் மிக நுண்ணிய பொருளையும் விடாது எடுக்கும். கழுத்து மிக்க குட்டை யானதால் இத்துதிக்கை இல்லாவிடில் ஆகாரம் ஜலம் முதலியவற்றை எடுத்து அதற்குப் புசிக்க முடியாது. ஆண் யானைக்குத் துதிக்கையின் இரு புறத்திலும் நீண்ட இரண்டு தந்தங்கள் உண்டு.

யானை நுட்பபுத்தியுடைய மிருகம். இதைப் பிடித்து வேலை செய்யப் பழக்குவார்கள். யானை கள் வசிக்கும் காட்டின் மத்தியில் ஒரு பெரிய அடைப்புக்கட்டி அதற்குள் யானையைப் புகும் படி செய்து பிடிப்பார்கள். அல்லது பெரிய குழி ஒன்று வெட்டி அதன்மேல் இலை தழை களைப் பரப்புவார்கள். யானை அக்குழியண்டை வந்து தழைகளைத் தின்னப் போகும்போது அக்குழியில் விழுந்துவிடும். பிறகு அதைப் பிடித்துப் பழக்குவார்கள்.

யானை மாமிசம் தின்னாது. தழைகளும் வளர்ந்த புற்களும் இதன் தீனியாகும். இது மிகுந்த பலம் உடையது. பெரிய மரங்களையும் வேருடன் பிடுங்கிவிடும். யானை சுமார் 100 முதல் 150 ஆண்டுகள் வரை வாழும். முன் காலத்தில் யானைகளைச் சண்டைகளில் உபயோகப் படுத்தினார்கள். இக்காலத்தில் அவ்விதம் இல்லை. மலைச்சாரல்களிலும் காடுகளிலும் வெட்டின மரங்களைத் தூக்கிவர யானை உபயோகப்படுகிறது. யானையின் தந்தம் மிக விலை உயர்ந்தது. யானைத் தந்தத்தினால் பெட்டிகள், சிப்புகள் முதலியன செய்யலாம். இந்தியர்கள் கோவில்களிலும் சுதேச அரசர்களின் அரண்மனைகளிலும் யானைகளை கௌரவத்திறகாக வளர்க்கிறார்கள்.

யானையின் வேறு பெயர்கள்,

| | |
|---|---|
| கரி. | அத்தி. |
| கஜம். | சிந்துரம். |
| களிறு. | வேழம். |
| குஞ்சரம். | வாரணம். |
| தந்தி. | பகடு என்பனவாம். |

---




# 4. சூரியன்.

---

பிள்ளைகளே! வானத்தைப் பாருங்கள். அங்கு, சூரியனும், மேகங்களும் தோன்றுகின்றன. அவற்றுள், சூரியனைப்பற்றியே நீங்கள் இப்பொழுது படிக்கத் தொடங்குகின்றீர்கள்.

சூரியன் காலையில் கிழக்குத் திசையில் தோன்றி, மாலையில் மேற்குத் திசையில் மறைகிறது. அவ்வாறு அது தோன்றியது முதல் மறைவதுவரையுள்ள காலமே பகல் என்பதாகும்.

பகலில் நமக்கு விளக்கு வேண்டுவதில்லை. சூரியன் நமக்குப் பகலில் வேண்டிய வெளிச்சத்தைக் கொடுக்கிறது. மாலையில் அது மறைந்து போவதால், வெளிச்சம் இல்லாமற் போகிறது. இரவும் உடனே வந்து விடுகிறது. அப்பொழுதுதான் நமக்கு விளக்கு வேண்டும். ஏன்?

பகலில் சில நேரங்களில் நமக்குக் காலில் பாதரட்சை யில்லாமல் நடக்க முடிகிறதில்லை. ஏன் ,தெரியுமா? சூரியன் நமக்கு வெளிச்சத்தோடு சூடும் தருகிறது.

சூரியன் நமக்கு ஒளியையும் சூட்டையும் தருகிறபடியால் அது ஒரு எரிந்து கொண்டிருக்கிற நெருப்புபோன்ற பொருளாய் இருத்தல் வேண்டும். அதன் உருவம் நமக்கு வட்டமாய்த் தோன்றுகிறது. ஆனால் அது வட்டமான பொருளன்று. அது பந்துபோல் உருண்டை வடிவமானது. ஆகையால் சூரியனை ஒரு நெருப்பு உருண்டை அல்லது நெருப்புப் பந்து எனச் சொல்லலாம்.

அது நமக்குப் புலப்படுகிறது போலச் சிறிய பொருளும் அன்று. அது ஒரு பிரமாண்டமான உருண்டை. வெகு தூரத்திற்கு அப்பால் உள்ள

ஒரு மரம் நமக்குச் சிறியதாய்த் தெரிகிறதல்லவா? அதுபோலச் சூரியன் நமக்குப் பல்லாயிரம் மைல் தூரத்திற்கு அப்பால் இருக்கிறது; ஆகையால் அது நமக்குச் சிறியதாய்க் காணப்படுகிறது.

பிராணிகளும், செடி கொடிகளும் உயிரோடிருப்பதற்குச் சூரியனே ஆதாரம். சூரியனில்லாவிடில் ஒரு பொருளும் பிழைக்க முடியாது. ஓர் இருட்டறையில் ஒரு தொட்டியில் ஒரு செடியை வளர்ப்போம். மற்றொரு செடியை வெளியில் சூரிய வெளிச்சம் படும்படியான இடத்தில் வைத்து வளர்ப்போம். இருட்டில் வளரும் செடி வரவர வெளுத்து நசித்துப்போகிறது. வெயிலில் வளரும் செடி செழித்து வளர்கிறது. அடைகாத்துக் குஞ்சு பொரிக்காத பிராணிகளாகிய ஈ, எறும்பு, பல்லி, மீன், பாம்பு முதலியவற்றின் முட்டைகள் சூரிய வெப்பத்தினால்தான் குஞ்சுகளாகின்றன. இவற்றால், சூரியன் மிக்க மேன்மையுடையது என்பதும் நமக்கு அவசியமானது என்பதும் நன்கு விளங்குகின்றன. இதுபற்றியே அதற்கு லோகபாந்தவன் என்ற ஒரு பெயரை நமது முன்னோர் இட்டிருக்கிறார்கள்.

இவ்வித மேன்மை பொருந்திய சூரியனை அநேக கோளங்கள் ஆகாயத்தில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கின்றன. நாம் வசிக்கும் இப் பூமியும் அவ்விதம் சூரியனைச் சுற்றி வருகிற ஒரு கோளமே யாகும்.

சூரியனுக்கு அருணன் அருக்கன், ஆதவன், ஆயிரங்கதிரோன், இரவி, உதயன், கதிரவன், பகலவன், பானு, ஞாயிறு, செஞ்சுடர், வெய்யோன், விண்மணி என்னும் வேறு பல பெயர்களும் உண்டு.

## 5. சிங்கமும் சுண்டெலியும்.

ஒரு சிங்கம் காட்டில் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தது. அங்குள்ள சில சுண்டெலிகள் அதன் மீது ஏறி விளையாடின. அவை சிங்கத்தின் காதை ஒரு வளை என்று எண்ணி அதனுள் நுழையவும் ஆரம்பித்தன. சிங்கம் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு கர்ச்சித்தது. சுண்டெலிகள் ஓடிவிட்டன. ஒன்றுமாத்




திரம் சிங்கத்தினிடத்தில் அகப்பட்டுக்கொண்டது. சிங்கம் கோபத்துடன் சுண்டெலியைக் கால்களி னல் பிடித்துக்கொண்டு, "அடா அற்பப்பயலே! என்னை யார் என்று நினைத்தாய்? நான் மிரு கேந்திரன் அல்லவோ? இதோ உன்னை நசுக்கி விடுகிறேன், பார்!" என்று சொல்லிற்று சுண் டெலி நடுக்குற்றுத் திகிலடைந்தது அது சிங் கத்தைப் பார்த்து "மிருகேந்திரா, நான் அறி யாமற் செய்த பிழையை மன்னித்தல் வேண்டும். இந்த உபகாரத்தை நான் எப்போதும் மற வேன்" என்று கூறிற்று. சிங்கம் சுண்டெலி

யின் மீது இரக்கங்கொண்டு அதைக் கொல்லா மல் விட்டது.

சில நாளைக்குப் பிறகு ஒரு வேடன் காட்டில் பறவைகள் பிடிக்க வலை கட்டியிருந்தான். அதில் சிங்கம் சிக்கிக்கொண்டது. அதனுல் அது தப்பி யோட முடியாமல் கர்ச்சித்தது. அக்கர்ச்சனை சுண்டெலியின் காதில் விழுந்தது. உடனே சுண்டெலி தன்னைக் கொல்லாமல் விட்ட சிங்கத்திற்கு ஏதோ ஆபத்து வந்திருக்கிறது என்று எண்ணி ஓடிவந்தது. அது சிங்கம் வலையில் சிக்கியிருப்பதைக் கண்டது. உடனே அது தனது கூரிய பற்களால் வலைக்கயிற் றைத் துண்டித்தது. சிங்கம் வலையை விட்டு வெளியே வந்து பெருமகிழ்ச்சி யடைந்தது.

“சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்”





## ௬. காகம்.

---

பிள்ளைகளே! மேலேயுள்ள படத்தைப் பாருங்கள். இது எதனுடைய படம் தெரியுமா? இதனுடைய நிறம் என்ன? இதன் உடலைப் பாருங்கள்? இதன் உடல் கருமை நிறமாக இருக்கிறது. இவ்வாறு உடல் முழுதும் கருமை யாகவுள்ள காக்கைக்கு அண்டங்காக்கை என்பது

பெயர். சில காக்கைகள் உடல் முழுதும் கருமை யாக இருக்கின்றன. அவற்றிற்கு அண்டங்காக் கைகள் என்பது பெயர்.

காக்கை, பூச்சி, புழு, சோறு, இறந்த எலி முதலியவற்றைத் தின்னும். இது மிக்க தைரிய மும் திருட்டுத்தனமும் உள்ள பறவை. குழந் தைகள் கையில் ஏதாவது தின்பண்டங்கள் வைத் திருந்தால் அது திடீரென்று பறந்து வந்து, அவற்றைக் கொத்திக்கொண்டு ஓடிப்போகும்.

காக்கை முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். தன் குஞ்சுகளை மிக்க அன்புடன் வளர்க்கும். தன் முட்டைகளைக் கருத்தாய்க் காப்பாற்றும். ஏனெனில் தான் பிற பறவைகளின் முட்டை களைத் திருடுமாதலால், வேறு பறவைகள், அப் படியே தன் முட்டைகளைத் திருடும் என்னும் எண்ணம் அதற்கு உண்டு. காக்கை முட்டை யிட்ட பிறகு, ஆணாவது பெண்ணாவது கூட்டில் தங்கி முட்டைகளைக் காக்கும். குயிலுக்கு அடை காக்கத் தெரியாது. குயிலின் முட்டைகள் பெரும்பாலும் காக்கையின் முட்டைகளை ஒத் திருக்கும். குயில் தன் முட்டைகளை, முட்டை யிட்ட காக்கையின் கூட்டில் வைத்துவிடும். இதைக் காக்கை யறியாமல் இருக்கக் குயில் ஒரு

தந்திரம் செய்யும். ஆண் குயில், காக்கை முட்டையிட்டிருக்கிற மரத்தில் தனிமையாய் இருக்கும் சமயத்தில், ஒரு கிளையில் உட்கார்ந்து கூவும். காக்கை குயிலைத் துரத்தும், குயில் வெகு தூரம் பறந்து போகும். காக்கையும் பின்தொடரும். அச்சமயம் பெண்குயில் தன் முட்டைகளைக் காக்கையின் கூட்டில் வைக்கும். இதையறியாது அக்காக்கை அம்முட்டைகளை அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும்.

காக்கை அதிகாலையில் எழுந்திருக்கும். அது பகல் எல்லாம் இரைதேடும். மாலையில் தண்ணீரில் மூழ்கிப் பிறகு கூட்டில் அடையும். காக்கைகள் தனித்து வாழ்வதே கிடையாது. பல காக்கைகள் ஓர் மரத்தில் தங்கி வசிக்கும். காக்கை, ஓர் இரையைக் கண்டால், தன் இனமான மற்றைக் காக்கைகளைக் கூவி அழைக்கும்.

காக்கை யிடமிருந்து பின்வரும் நீதிகளைக் கற்கலாம். அவை, "அதிகாலையில் எழுந்திருத்தல், இனத்தை விரும்பல்; உண்டிக்கழகு விருந்தோடு உண்ணல், தினமும் மூழ்கிச் சுத்தமாயிருத்தல்" என்பனவாம்.

---

# 7. உடல் நலம்.

நாம் நோயில்லாமல் வாழ வேண்டுமானல், நமது உடம்பு, நாம் உடுக்கும் உடை, உண்ணும் உணவு, குடிக்கும் தண்ணீர், சுவாசிக்கும் காற்று, ஆகிய இவை சுத்தமாக இருத்தல் வேண்டும். இவைதாம் நமக்கு நோய் உண்டாவதற்கு இடங்களாகும். நாம் எவ்வளவு பொருள் வைத்திருந்தாலும், நோய் இல்லாமலிருந்தால் தான், இன்பமாக இருத்தல் கூடும். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்."

நமது உடம்பின் தோலில் அளவில்லாத சிறு துவாரங்கள் இருக்கின்றன. அவை நம் கண்ணுக்குத் தெரியா. அவற்றின் வழியாகவே, நம் உடம்புக்குள்ளிருக்கும் அழுக்கு வெளியாகிறது. நாம் நாடோறும் அழுக்குத் தேய்த்துக் குளிக்காமற் போவோமானல், அத்துவாரங்கள் அடைபட்டு நமக்குச் சொறி, சிரங்கு முதலிய பலநோய்கள் உண்டாகும்.

நம்முடைய சட்டை, துணி முதலியவை அழுக்கடைந் திருக்குமானல், நாம் அவற்றை உடுக்கக் கூடாது. அத்துணிகளில் உள்ள

அழுக்கே நம் உடலிற் படியும். ஆகையால் தினந்தோறும் நமது உடைகளை அழுக்கறத் துவைக்க வேண்டும். இதனால்தான் பெரியோர்கள், "கந்தையானாலும் கசக்கிக்கட்டு" என்று சொல்லுகிறார்கள்.

நாம் உண்ணும் உணவு சுத்தமானதாய் இருத்தல் வேண்டும். உடம்புக்கு நன்மையைத் தரக்கூடியதாய் இருத்தல் வேண்டும். அழுகின பழங்களையும், கெட்டுப்போன காய்கறிகளையும் உண்ணலாகாது. எளிதில் ஜீரணமாகக்கூடிய பண்டங்களைத்தான் நாம் உண்ணல் வேண்டும். இவ்வாறு நல்ல பொருள்களே உணவாகக் கிடைத்தாலும், அவற்றை நாம் கண்டபோதெல்லாம் உண்ணுதல் கூடாது. பசித்தபோது வேண்டியவளவே சாப்பிடல் வேண்டும். பசியில்லாத சமயத்திலும், அளவுக்கு மிஞ்சியும் சாப்பிடுதல் நோயை உண்டுபண்ணும்.

நாம் துவைப்பதும், குளிப்பதும், அருந்துவதும் சுத்தமான நீராய் இருத்தல் அவசியம். குடிக்கும் தண்ணீரைக் காய்ச்சி உட்கொள்ளுதலே சிறந்ததாகும். தண்ணீரில் கண்ணுக்குப் புலப்படாத கிருமிகள் இருக்கும். காய்ச்சினால், அதிலிருந்த கிருமிகள் சூட்டினால் இறந்துவிடும். பிறகு வடிகட்டிக் குளிர்ந்தபின் பருகுவது நலம்.

நாம் சுத்தமான காற்றையே சுவாசிக்க வேண்டும். நல்ல காற்று உலவும் இடங்களில் வீடுகள் கட்டவேண்டும். வீடுகளில் நல்லகாற்று வீசுவதற்கும், கெட்ட காற்று வெளியே போவதற்கும் தக்கபடி பலகணிகள் இருத்தல் வேண்டும். வீட்டுப்புறங்களில் தண்ணீர் தங்கிக் கொண்டிருப்பதனாலும், குப்பைகளிருப்பதனாலும், பல சிறுபூச்சிகள் உண்டாகி, வீசுகின்ற நல்ல காற்றோடு கலந்து அதனைக் கெடுத்து விடுகின்றன. ஆகவே, வீட்டுப் புறங்கள் மிகச் சுத்தமாயிருத்தல் அவசியம்.

"நோயற்ற வாழ்வே வாழ்வு."

---

## 8. பிரகலாதன்.

---

பல நாளைக்கு முன், இரணியகசிபு என்ற ஓர் அசுரன் வாழ்ந்து வந்தான். அவன் மிகக் கொடியவன். அவன் பிரமதேவனைக் குறித்துக் கடுமையான தவம் புரிந்தான். பிரமனும் இவன் முன் தோன்றினார். இரணியகசிபு "சுவாமி, பகலிலும், இரவிலும், பூமியிலும், வானத்திலும்,




உள்ளிலும் வெளியிலும், உன்னல் படைக்கப் பட்ட உயிர் உள்ளதும் இல்லாததுமான எல் லாப் பொருள்களாலும் எனக்கு மரணம் நேரி டல் கூடாது என்று வேண்டினன். பிரமனும் இவன் தவத்திற்கு இரங்கி இவன் வேண்டிய வரத்தைத் தந்தருளினர்.

இரணியகசிபு தான் அடைந்த வரத்தை எண்ணி இறுமாப்பு அடைந்தான். தன்னுட்டில் உள்ளவர்கள், வேறு தெய்வங்களைத் தொழலாகாது என்றும், இரணியனை தன்னையே தெய்வம் என்று பாவிக்கவேண்டும் என்றும் கட்டளையிட்டான். இரணியனுக்குப் பிரகலாதன் என்ற ஒரு மகன் இருந்தான். அவன் சிறந்த விஷ்ணு பக்தன். அவன் எப்போதும் "நாராயணுய நம:" என்று சொல்வான். இது இரணியனுக்குத் தெரிந்தது. அவனை "இரணியாய நம:" என்று சொல்லும்படி கட்டளையிட்டான். அவன் அவ்வாறு சொல்லுவதை மறுத்தான். உடனே இரணியன் கோபங்கொண்டு பிரகலாதனைப் பல வாறு வருத்தி, முடிவில் கொல்லவும் எண்ணினன். அவன் தன் தந்தை செய்த ஒன்றையும் பொருட்படுத்தவில்லை.

ஒருநாள் இரணியன் தன் மகனை நோக்கி "மகனே! நீ போற்றும் நாராயணன் எங்கேயிருக்கிறன்?" என்று கேட்டான். அதற்குப் பிரகலாதன் "அவர் எங்கும் இருக்கிறர்" என்றன். உடனே இரணியன் இறுமாப்போடு இத்தூணில் இருக்கிறனு?" என்று சொல்லித் தூணை உதைத்தான்.

உடனே தூணிலிருந்து மகாவிஷ்ணு நரசிங்க ரூபமாய் வெளிவந்து இரணியனை கிழித்துக் கொன்றார். பின்னர் பிரகலாதன் கடவுளின் அருளால் எல்லா நன்மையும் பெற்று வாழ்ந்திருந்தான்.

"தெய்வம் இகழேல்"

---

## ௯. செங்கல்லின் சரித்திரம்.

---

நான் ஒரு செங்கல். என் பிறப்பையும் வளர்ப்பையும் கேளுங்கள். அது விநோதமாயிருக்கும். நான் ஒரு ஆற்றுப்படுகையில் வண்டல் மண்ணாக முன்னேயிருந்தேன். என்னை ஒருவன் வெட்டிக்குவித்தான். பிறகு அக்குவியலின் பேரில் அவன் தண்ணீரை ஊற்றினான். மறுநாள் அவன் அக்குவியலை நன்றாகத் துவைத்தான். பிறகு என்னை எடுத்து, அவன் ஒரு பலகை அச்சில் அப்பி ஒல கல் உருவமாகச் செய்தான். அப்போது என் நிறம் கறுப்பாயிருந்தது.

நான் அவ்விடத்தே கிடந்து, வெயிலால் உலர்ந்து காய்ந்து கெட்டியானேன். பிறகு

அவன் என்னைக் கட்டைகளின் மேல் வைத்துச் சுட்டான். நான் சிவந்த நிறம் அடைந்தேன்.

சிறிது நாட்களுக்கெல்லாம் என்னை அவன் ஒரு வண்டியில் ஏற்றி ஒரு தெருவிற்குக் கொண்டு போனான். அங்கு அவன் என்னையும் என்னைப் போன்ற வேறு பல கற்களையும் அடுக்கிச் சுவராகக் கட்டி நல்ல வீடொன்றை அமைத்தான். அவ்வீட்டில் பலர் பலகாலம் வாழ்ந்து வந்தார்கள். நீண்ட காலம் சென்றது. பின்னர் அவ்வீடும் இடிந்து பாழாயிற்று. நான் தெருவில் விழுந்து கிடந்தேன் என்னை ஒரு சிறுவன் எடுத்து வீசி எறிந்தான். நான் பல துண்டுகளாய் உடைந்தேன். நான் மழையிலும் நனைகிறேன்; வெயிலிலும் உலர்கிறேன், வரவர என் தேகம் பொடிப்பொடியாய் உதிர்ந்து விடுகிறது. பின்னர்ச் சிறிது காலத்துள், நான் மண்ணோடு மண்ணாய் விடுவேன்.

பிறகு நான் மழைத்தண்ணீரால் தள்ளப்பட்டு வயல்களிலும், குளங்களிலும் ஆறுகளிலும் சேர்ந்து மறுபடியும் வண்டல் மண்ணாகிறேன்.

---



# 10. மளிகைக்கடை.

---

இந்தப் படத்தைப் பார். இது ஒரு மளிகைக் கடையின் படம். கடைகளில் பல வகை உண்டு. அவை, பழக்கடை, ஜவுளிக் கடை மளிகைக்கடை முதலியன. மளிகைக் கடையில், உப்பு, புளி, மிளகாய், பருப்பு, வெல்லம், உளுந்து, மிளகு, ஜீரகம், கொட்டைப் பாக்கு, எண்ணெய் முதலிய நமது உணவிற்கு

வேண்டிய பல சரக்குகள் விற்கப்படும். ஆகையால் இதை பலசரக்குக் கடையென்றும் சொல்லுவதுண்டு.

இந்தக் கடையில் உட்கார்ந்து இருப்பவன் கடையின் முதலாளி. இவன் பக்கத்தில் இருக்கும் பொருள்களைப்பார். ஒரு பெட்டி, தராசு, படிக்கற்கள், படிகள், சில செம்புகள் முதலியன இருக்கின்றன. இவைகள் இக்கடைக்காரனுக்கு அவசியமானவை. இவன் சரக்குகளை விற்று, வாங்கும் பணத்தைப் பெட்டியில் போடுவான். கடையில் உள்ள புளி, மிளகாய், வெல்லம் முதலிய சரக்குகளில் சிலவற்றை நிறுத்து விற்பான். அதற்குத் தராசும், பலம், சேர், விசை முதலிய எடை போடும் படிக்கற்களும் வேண்டும். சில பொருள்களை அளந்து விற்கவேண்டும். அதற்குப் படிகளும் மரக்கால்களும் அவசியம். நாம் படியால் அளந்து வாங்கும் சரக்குகள் எவை? உப்பு, பருப்பு, உளுந்து முதலியவற்றை நாம் படியால் அளந்து வாங்குவோம். நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், ஆமணக்கெண்ணெய் முதலியவற்றை வாங்குவது செம்புகள் இல்லாமல் முடியாது. இவற்றிற்குக் கலயச் செம்பு, சேர்ச்செம்பு என்பன பெயராம். கொட்டைப்பாக்கு முதலியவற்றை எண்ணி

வாங்குகிரேம். ஆனுல் ஜவுளிக்கடைபோல் கஜக்கோலால் அளந்து வாங்கும் சரக்குகள் மளிகைக்கடையில் கிடையா.

இம்மளிகையில் விற்கப்படும் சரக்குகள் யாவும் நமது ஊரில் விளைந்தவை அல்ல. சில நமது ஊர்ப்பொருள்கள். மற்றும் சில பிற ஊர்ச் சரக்குகள். நமது ஊர்ச்சரக்குகள் எவை? பிற ஊர்ப் பொருள்கள் எவை?

## 11. மண்புழு.

இது ஒரு அற்ப உயிராகும். இது பூமிக்குள் வளைத்தோண்டி வாழும். மழைக்காலத்தில் இதை வெளியே நாம் அடிக்கடி காணலாம். இது உருவத்தில் பாம்புபோல் இருப்பதால் இதை நாகப்பூச்சி என்பதும் வழக்கம்.

மண்புழுவின் உடல் பல சிறு வளயங்களாலாயது. இதற்குக் கண், காது, கால் முதலியவை கிடையா. உடலின் அடிப்புறத்தே இரண்டு மயிர் வரிசைகள் உண்டு. அவற்ருல் இது சுலபமாய் நகரும்.



இதன் உணவு அழுகின இலைகளும் தழை களும் ஆகும். இவை மண்ணுடன் கலந்திருக்கும் மடித்த இலைகளை மண்ணுடன் விழுங்கும். ஆத லால் இதற்கு 'மண்ணுண்ணிப்புழு' என்ற பெய ரும் உண்டு. இது, தான் உண்ட மண்ணைப் பூமி க்கு மேல்வந்து வெளிப்படுத்தும். இப்புழு வெளி ப்படுத்தின மண் மிகவும் சாரம் உள்ளது. வெளி யில் கிடக்கும் இலை தழைகளைத் தன் வளைக்குள் இழுத்துச் செல்லும்

மண் புழுவில் ஆண், பெண் என்ற வகை கிடையாது. எல்லாப்புழுவும் முட்டையிடும்.

இப்புழுவில் ஓர் அதிசயம் உண்டு. இது இரு துண்டாய் வெட்டப்பட்டாலும் இறக்காது. இரண்டு துண்டுகளும் இரண்டு புழுக்களாய் வளர்ந்து விடும். இவ்வித உயிர்கள் மிகப்பல உள. அவற்றைப்பற்றி நீங்கள் மேல் வகுப்புக்களில் படிப்பீர்கள்.

---

## 12. புலியும் பிராமணனும்.

---

ஒரு காட்டில் ஒருகிழப்புலி இருந்தது. ஓடி இரைதேட அதற்கு முடியாது. ஆதலால் அது ஒரு உபாயம் செய்தது. அதனிடம் ஒரு பொற்காப்பு இருந்தது. அதைக்கையில் வைத்துக்கொண்டு அக்காட்டிலுள்ள ஒரு ஓடைக் கரையில் உட்கார்ந்திருந்தது. அவ்வோடையில் சேறு அதிகம். ஜலம் மிகக்குறைவு.

ஒருநாள் ஒரு பிராமணன் அவ்வோடைக் கரைவழியே போய்க்கொண்டிருந்தான். புலி அவனைக்கூவி அழைத்தது "ஓ பிராமணா! நான் ஒரு கிழப்புலி. நான்செய்த பாவம் நீங்க நான் தவம் செய்கிறேன். உன்னைப் பார்த்தால் மிகுந்த ஏழை யென்று தோன்றுகிறது. என்



னிடம் உள்ள இந்தப் பொற்காப்பை நான் தானம் செய்துவிட விரும்புகிறேன். இக்குளத்தில் மூழ்கி இதைப்பெற்றுக்கொள்" என்றது.

பிராமணன் முதலில் புலியிடம் போக பயந்தான். ஆனால் அவனது ஆசை அவனைத் தைரியப்படுத்திற்று. அவன் கொஞ்ச நேரம் தயங்கினான். கடைசியாக அவன் புலியிடம் போய்க் காப்பைப்பெறத் தீர்மானித்தான். புலி கூறியவாறு முதலில் நீரில் மூழ்க, அவன் ஓடையில் இறங்கினான். கால்கள் சேற்றில் சிக்கிக்கொண்டன. அங்குமிங்கும் நகர முடியாமல் தவித்தான்.

பிராமணன் சேற்றில் சிக்கிக்கொண்டதைப் புலி அறிந்தது. உடனே அது மெல்ல, கரையோரத்திற்கு வந்து, பிராமணன் கையைப் பிடித்துக் கரையில் இழுத்துக்கொன்று தின்றது.

பேராசை பெரு நஷ்டம்.

துஷ்டர்கள் வார்த்தையை நம்பலாகாது.

---

# 13. தேள்.

---

தேள் விஷமுள்ள ஒரு கொடிய ஜந்து. தேள் கொட்டின ஒருவன் படும் துன்பத்தைப்பார்த்தால் நாம் பயப்படுகிறோமல்லவா? தேளைக் கண்டால் யாவரும் நடுங்குவார்கள். இது வீடுகளின் மூலைகளிலும் மேற் கூறைகளிலும், குப்பையுள்ள இடங்களிலும் வசிக்கும். இது மங்கலான மஞ்சள் நிறம் உடையது. தேளில் சில கறுநிறமாயுமிருக்கும். இவற்றிற்குக் கருந்தேள் என்பது பெயர். இதற்கு விஷம் அதிகம். மற்றும் சில சிவந்த நிறமாய் இருக்கின்றன. இவற்றிற்குச் செந்தேள் என்பது பெயர்.



தேளின் தலைப்புறம் உள்ள இரண்டு நீண்ட உறுப்புக்களைப் பாருங்கள்! இவைகள் அதற்குக் கைகளைப்போல் உதவி செய்கின்றன. தேளிற்கு கால்கள் எட்டு உண்டு. அதன் பின்புறத்தில் நீண்ட உறுப்பொன்று உளது. அதனை வால் என்று சிலர் சொல்லுவார்கள். அது வால் அன்று; அது அதனுடைய உடலின் பின்பாகம் ஆகும். இவ் வால் போன்ற உடலின் நுனியில் விஷப்பை இருக்கிறது, இதன் நுனியில் முள்போல் இருப்பதனைக் கொடுக்கு என்பார்கள். இக்கொடுக்கினுல் தான் தன் பகையைக் கொட்டும். கொட்டினுல், விஷம் உண்டு. வலியும் அதிகமாய் இருக்கும்.

சிறு பூச்சிகளும், புழுக்களும் தேளிற்கு உணவு ஆகும். இது பகலெல்லாம் உறங்கி,

இரவில் இரை தேடித் திரியும். இதற்குப் பற்கள் உண்டு. இது தன் வாயாலும் கடிக்கும் அதனுல் நமக்கு நோய் உண்டாவதில்லை.

தேளில் ஆண் பெண் என இருவகையுண்டு பெண் தேள் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்காது. மிருகங்களைப்போல் குட்டி போடும். ஒரு பெண் தேள் ஒரு முறையில் முப்பது குட்டிகள் வரையில் போடும். தேள் தனது குட்டிகள் பெரியனவாகும் வரையில் முதுகின்மேல் சுமந்து செல்லும். சிலர் பெண் தேள் குட்டி போட்டவுடன் இறந்துபோகும் என்பார்கள். அது உண்மையன்று.

தேள் கொட்டின இருபத்து நான்கு மணி நேரம் வரையில் வலி இருக்கும். தேள் விஷத்தால், சிலர் இறப்பதும் உண்டு. தேள் கொட்டின உடனே, கொட்டின இடத்திற்குச் சற்று மேல் புறத்தைக் கயிற்றினுல் இறுகக் கட்டுதல் வேண்டும். கொட்டின இடத்தை இரத்தம் வெளிப்படும்படி தேய்ப்பது நலம். வெங்காயத்தைக் கசக்கிக் கொட்டுவாயில் தேய்ப்பதும் ஒரு வகை சிகிச்சையாகும். வைத்தியர்கள் கொடுக்கும் மருந்தைத் தடவுதல் மிக நல்லது.

நமது வீடுகளில் தேள் வராமல் இருப்ப தற்கு நாம் மாதம் இருமுறை ஒட்டடை அடிக்க வேண்டும். தினந்தோறும் வீட்டு மூலைகள், கதவு இடுக்குகள், ஜன்னல் இடுக்குகள் முதலிய வற்றைச் சுத்தமாய் பெருக்கி வைத்திருத்தல் வேண்டும்.

## 14. கண்ணகி.

காவிரி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் காவிரிப்பூம்பட்டினம் என்ற ஓர் சிறந்த நகரம் உண்டு. அது முற்காலத்தில் சோழ அரசர் களின் தலை நகராய் விளங்கியது. அந்நகரத்தில் கோவலன் என்னும் ஒரு செட்டி இருந்தான். அவன் ஒரு பெரிய தனவந்தன். அவனுக்கு கண்ணகி என்ற கற்புடைய மனைவி இருந்தாள்.

கோவலனுக்கு தீயவர் பலர் நண்பர்களா னார்கள். அவர்களோடு கூடின கோவலன், தன்னிடமிருந்த பொருள்களெல்லாவற்றையும் அழித்துவிட்டான். கடைசியில், அவனுடைய மனைவி கண்ணகியின் கால் சிலம்புகள்தான் மிகுந்து நின்றன. அவன் அவைகளை விற்று வது வியாபாரம் செய்யலாம் என்று அவளோடு மதுரை நகரை அடைந்தான்.



மதுரை நகரில் ஓர் இடைச்சி வீட்டில் கண்ணகியை இருத்தி, கோவலன் ஒரு சிலம்பை எடுத்துக்கொண்டு வணிகர் வீதிக்கு விற்கச் சென்றான். அங்கு ஒரு பொற்கொல்லனிடம் அதை விலை பேசினான்.

அக்காலத்தில் மதுரையை நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன் ஆண்டு வந்தான். அவன் மனைவியின் கால் சிலம்பு ஒன்று காணமற் போயிருந்தது. கோவலன் கொண்டுவந்த சிலம்பு அரசியின் சிலம்பை ஒத்திருந்தது. இதை அறிந்த அக்கொல்லன் கோவலனைச் சிறிது

காத்திருக்கச் சொல்லிவிட்டு, அரசனிடம் ஓடி, “வேந்தே! நமது மகாராணியின் சிலம்பு இதோ இருக்கிறது. இதைத் திருடினவன் என் வீட்டில் இருக்கிறான்,” என்று கூறினான்.

இதைக் கேட்டதும் அரசனுக்கு அடங்காத கோபம் உண்டாயிற்று. உடனே தனது சேவகர்களை அழைப்பித்து, “நீங்கள் இவனுடன் சென்று நமது சிலம்பைத் திருடிய கள்வனைக் கொன்று வாருங்கள்,” என்று கட்டளையிட்டான். சேவகர்களும் அரசன் ஆணைக்கு அடங்கி அவ்விதம் செய்தார்கள்.

சிலம்பு விற்கச்சென்ற தன் கணவன் கொலையுண்டான் என்பதைக் கண்ணகி அறிந்தாள். உடனே தன்னிடமுள்ள மறு சிலம்பை எடுத்துக் கொண்டு மன்னனிடம் ஓடி, “வேந்தே! உமது மனைவியின் கால் சிலம்பின் உள்ளே இருப்பது யாது?” என்று கேட்டாள். அரசன், “என் மனைவியின் சிலம்பின் உள்ளிருப்பது முத்து,” என்றான். கண்ணகி அரசன் கையிலிருந்த தன் சிலம்பை வாங்கி உடைத்தாள். அதன் உள்ளே மாணிக்கங்கள் இருந்தன. அரசன் வெட்கம் அடைந்தான்.

கண்ணகி கோபங்கொண்டு, "தெய்வமே! விசாரியாது என் கணவனைக் கொன்ற அரசனின் நகரம் பாழாகட்டும்," என்று சொல்லிவிட்டுத் தன் கொழுநன் கொலையுண்டு கிடந்த இடம் சென்றாள். அங்கு அவளும் உயிர் துறந்தாள். இன்றைக்கும் கண்ணகியைச் சிலர் தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள்.

---

# 15. ஆடு.

ஆடு நாட்டு மிருகங்களில் ஒன்று. இது வெகு சாந்தமுள்ள பிராணி. இது நமக்குப் பல வகையில் உபயோகமானது.

இதன் பால் பசுவின் பாலைவிட உருசியானது. உடம்பிற்கு நல்ல புஷ்டியைக் கொடுப்பது. ஆட்டை "எளியோர் பசு" என்று சிலர் கூறுவார்கள். இதன் மாமிசம் சிலர்க்கு உணவாக உபயோகப்படுகிறது. இதன் தோலால் மிதியடி, பணப்பை முதலியன செய்யலாம். இதன் மயிரால் கம்பளங்கள் நெய்யலாம். இதன் சாணம் வயல்களுக்கு நல்ல எருவாகும்.



ஆடுகளில் வெள்ளாடு செம்மறி ஆடு என இருவகை உண்டு. வெள்ளாடு அநேகமாய் கருமை நிறமாகவும், செம்மறி ஆடு பெரும்பாலும் செம்மை நிறமாகவும் இருக்கும் வெள்ளாட்டிற்குப் புல்லைவிட இலை தழைகளில் பிரியம் அதிகம். ஆகையால் செடி கொடிகளைக் கடித்து வளர விடாமல் நாசம் செய்யும். இது தோட்டங்களிலுள்ள மரங்களை அழிக்கும். இதனாலேயே கிராமங்களில் வெள்ளாடுகளை அதிகமாய் பரவ விடுவதில்லை. சில ஊர்களில் வெள்ளாடுகளை வளர்ப்பதே இல்லை.

செம்மறி ஆடுகள் தழைகளை அதிகம் விரும்புவதில்லை. புல் பூண்டு முதலியவற்றைப் பிரியமாய்த் தின்னும். ஆகையால் சில இடையர்கள் செம்மறி ஆட்டை அதிகமாய் வளர்க்கிருர்கள். காடுகளில் செம்மறி ஆட்டை ஏராளமாய் மேய்விடலாம். செம்மறியில் ஆண் ஆட்டிற்குக் கொம்புகள் சுருண்டு வளைந்திருக்கும்.

சிலர் வேடிக்கைக்கு நல்ல கொம்புள்ள கடாக்களை வளர்க்கிருர்கள். இவற்றை அவர்கள் ஒன்ருேடொன்று சண்டையிடப் பழக்குகிருர்கள்.

---

## 16. தாவரம்.

---

மரம், செடி, கொடி, புல், பூண்டு ஆகிய இவைகளுக்குத் தாவரம் என்பது பெயர். தாவரங்களுக்கும் நம்மைப்போல் உயிர் உண்டு. நாம் உண்டு வளர்வது போல் அவையும் உண்டு வளர்கின்றன. நாம் சுவாசிப்பதுபோல் அவைகளும் சுவாசிக்கின்றன. ஆனல் அவை நம்மைப்போல் இடம்விட்டு நகரமுடியாது.



நமது சரீரம் தலை, உடல், கை, கால்கள் என்ற பல்பிரிவுகளை யுடையது. அவ்வாறே தாவரத்திற்கும் வேர், தண்டு, இலை என்ற பல் பிரிவுகள் உண்டு.

வேரின் நிறம் வெண்மையானது. வேரில் ஆணிவேர், சல்லிவேர், ஒட்டுவேர் எனப் பல வகையுள. வேர் பூமியைத் துளைத்துக் கீழ் நோக்கிவளரும். அது தாவரத்திற்கு வேண்டிய உணவைப் பூமியிலிருந்து கொண்டு வருகிறது.

மேலும் அது தாவரங்கள் காற்றினுல் கீழே விழாதவாறு காக்கிறது.

தண்டு பருத்து ஓங்கிவளரும் தாவரத்திற்கு மரம் என்பது பெயர். சில மரங்கள் அறுபது அல்லது எழுபது அடிவரை வளரும். தண்டு பருக்காமல் மெல்லியதாய் நீண்டு வளரும் தாவரத்திற்குக் கொடி என்பது பெயர். உங்களுக்குத் தெரிந்த மரங்கள், செடிகள், கொடிகள் இவற்றைக் கூறுக. தண்டுகளில் சிலவற்றில் கிளைகள் இருக்கும். சில தண்டுகளில் கிளைகள் இல்லை. கிளைகளுள்ள மரங்கள் எவை? கிளைகள் இல்லாத மரங்கள் யாவை?

இலைகளின் நிறம் பச்சை. இலைகள் ஆகாயத்திலிருந்து தாவரத்திற்கு வேண்டிய உணவைக் கிரகிக்கின்றன. ஆகவே இலைகளும் வேர்களைப்போல் தாவரத்தை வளர்க்கும் உறுப்புக்களாம்.

தாவரங்கள் நமக்கு மிக்க உபயோகமானவை. சில, நமக்கு வேண்டிய உணவுப் பொருளகளைக் கொடுக்கின்றன. மற்றும் சில, நாம் வீடுகள் கட்டுவதற்கு உபயோகமாகின்றன. வேறு சில

ஆடு மாடுகளுக்கு உபயோகப்படுகின்றன. தாவரங்களின் இலைதழைகள் பூமிக்குள் மடிந்து எருவாகிப் பயன்படுகின்றன.

---



# 17. ஈ.

---

இந்த ஈயின் படத்தைப் பாருங்கள். இதன் உடல், தலை, மார்பு, வயிறு என மூன்று பிரிவுகள் உடையது. இதன் தலையில் இரண்டு சிறிய கொம்புகள் காணப்படுகின்றன. இரண்டு கண்கள் தலையின் மேற்புறத்தில் தெரிகின்றன.

ஈயின் கால்களை எண்ணிப்பாருங்கள். அவை எங்கிருந்து தோன்றுகின்றன? பக்கத்திற்கு மூன்று ஆக ஆறுகால்கள் இருக்கின்றன. அவை மார்பின் பக்கத்திலிருந்து கிளம்புகின்றன. அக் கால்களில் நுண்ணிய மயிர்கள் இருக்கின்றன. அதன் மார்பின் அடிப்புறத்திலிருந்து இரண்டு மெல்லிய சிறகுகள் முளைத்திருக்கின்றன.

ஈக்களில் ஆண் பெண் என இருவகை உண்டு. பெண்ஈ தடவையில், நூறுமுதல் நூற்றைம்பது முட்டைகள்வரையில் இடும். அது குப்பை, அழுக்கு முதலியவற்றில் முட்டைகளை இடும். முட்டையிட்ட நான்குமணி நேரத்தில் அம்முட்டைகள் சிறு புழுக்களாய்ப் பொரிக்கப் படும். பிறகு பத்து நாட்களில் புழுக்கள் ஈக்களாக மாறிவிடும்.

ஈக்கள் நமக்குத்தீமையே செய்வனவாகும். அவைகள் நமக்கு வியாதியைக்கொண்டுவரும் என்பது பொருத்தமே. அவை எதையும் உண்ணப் பிரியம் உடையவை. அவை மலத் தின்மீதும் உட்காரும்; உடனே பறந்துவந்து நமது உணவின்மேலும் உட்காரும். மலத்தின் மீது உட்கார்ந்தபோது ஈயின் காலிலுள்ள மயிர்களில் மலம் ஒட்டிக்கொள்ளும். பிறகு நமது ஆகாரத்தில் உட்காரும்போது அம்மலம் நமது

ஆகாரத்தில் கலந்துவிடும். அதை நாம் அறியாமல் உண்டு நோய்க்கு இடம் தருகிறோம். ஆதலால் நாம் ஈக்களை ஒழித்தல்வேண்டும்.

ஈக்களை ஒழிக்கப்பல வழிகள் உள. ஈக்கள் முட்டைவைக்கும் களமான குப்பை, கூளங்களை நமது வீட்டின் அருகே கொட்டுதல் கூடாது. உணவில் ஈக்களை மொய்க்கவிடலாகாது. நமது வீட்டு ஜன்னல்களில், ஈக்கள் வராதபடி, வலைகள் போட்டுக்கொள்ளுவதே மிகவும் நலம்.

---

## 18. தச்சன்.

---

இப்படத்தில் உள்ளவன் ஒரு தச்சன். இவன் பலவகைத் தொழிலாளிகளில் ஒருவன். மரவேலைசெய்பவனைத் தச்சன் என்பார்கள்.

ஒரு வீடுகட்ட முதலில் சுவர் எழுப்பவேண்டும். மரத்திறல் தூண், உத்திரம், மோசனம் முதலியவைகள் செய்தல்வேண்டும். சுவர் எடுப்பவன் கொத்தன். தூண், உத்தரம் முதலியன செய்பவன் தச்சன். மேலும் இவன் மேசை, நாற்காலி முதலிய மரசாமான்களும் செய்வான்.




ஒவ்வொரு தொழிலாளிக்கும் அவனுடைய தொழிலுக்கு ஏற்ற கருவிகள் வேண்டும். தச்சனுக்குவேண்டிய ஆயுதங்கள் பலவுள. மரங்களை அறுப்பதற்கு வாள்வேண்டும். நாட்டு மரங்களின் பட்டையைச்செதுக்க வாச்சி வேண்டும். மரங்களை இழைக்க இழைப்புளி வேண்டும். வேலைக்கு வேண்டியபடி மரங்களைச் செதுக்க உளிவேண்டும். உளியை வைத்துச் செதுக்கும்படி அடிப்பதற்குச் சுத்தி அல்லது கொட்டாப்புளி வேண்டும். மரங்களில் சிறிய

துவாரங்கள் இடுவதற்குத் துளைப்பணம் வேண்டும். மரத்துண்டுகளையும் சட்டங்களையும் அளக்க அளவுகோல் வேண்டும்.

தச்சன் தனது ஆயுதங்களை அடிக்கடி கூர்மை செய்தல் வேண்டும். நீ ஒரு தச்சன் வேலைசெய்யும் இடத்திற்குப்போய் அவனுடைய ஆயுதங்களைக்கவனித்துப்பார். அவன் அவற்றை உபயோகிக்கும் விதங்களையும் கவனி. நீ இவ்விதமே ஒவ்வொரு தொழிலாளியின் ஆயுதங்களையும், அவன் அவற்றை உபயோகிக்கும் விதத்தையும் ஊற்று நோக்குதல் வேண்டும்.

---




## 19. பருந்து.

---

பருந்து நாம் தினந்தோறும் காணக்கூடிய பறவை. அதன் நிறம் பழுப்பு. நாம் சாதாரணமாய் வீட்டுப்புறங்களில் பார்க்கிற பறவைகளில் பெரியது இதுவே.

பருந்தின் அலகு மிக்க உறுதியானது. மேல்அலகு, கீழ்அலகைவிடச்சற்று நீளமானது. மேலும், மேல் அலகு கூர்மையாயும் நுனியில்




வளைந்தும் இருக்கும். இதன் இறகுகள் நீளமாயும் அகலமாயும் இருக்கும். இதன் வால் இருபிளவாய் இருக்கும். இதன் கால் நகங்கள் கெட்டியாயும் கூர்மையாயுமுள்ளன.

பருந்து ஆகாயத்தில் நெடுந்தூரம் சென்று பறக்கும். இதன் பார்வை வெகு கூர்மையானது. இது மீன், பாம்பு, தவளை, இறந்த எலி முதலிய வற்றைத்தின்னும். இது நாம் வளர்க்கும் புறு கோழி முதலியவற்றின் குஞ்சுகளைத் தூக்கிப்

போய்விடும். ஆறு, குளம் முதலிய நீர் நிலைகளின் மேற்புறத்தின்மீது பறந்துகொண்டிருந்து திடீரென்று பாய்ந்து, தண்ணீருக்குள் இருக்கும் மீன்களைக் கால்களால் பற்றித் தூக்கிக் கொண்டுபோகும்.

காக்கையின் ஆகாரம் இதன் ஆகாரத்தை ஒத்திருப்பதால் இரண்டிற்கும் பகை உண்டு. ஒரு காக்கை ஒரு பருந்தைத் தனியே எதிர்க்க இயலாது. இரண்டு காக்கைகள் சேர்ந்து ஒன்று பருந்தின் முன்னும் மற்ருென்று பின்னுமாக இருந்து எதிர்க்கும். காக்கைகள், பருந்தின் முட்டைகளைத் திருடுவதில் குறிப்பாய் இருக்கும்.

பருந்தின் ஒருவகைக்குக் கழுத்து வெண்மையாய் இருக்கும். இதை இந்துக்கள் கருடன் என்பார்கள். சிலர், "விஷ்ணுவின் வாகனம்" என்று எண்ணிப் பறக்கும்போது தொழுவார்கள்.

---



## 20. போலீஸ் சேவகன்.

---

தம்பி:—அண்ணா! இவ்வீதியில் நின்றுகொண் டிருப்பவன் யார்?

அண்ணன்:—தம்பி! இவன் ஒரு போலீஸ் சேவகன்.

தம்பி:—இவன் ஏன் இங்கேயே நிற்கிறன்?

அண்ணன்:—தம்பி! இவன் ஜனங்களுக்கு நன்மைகள் செய்ய இங்கேயே நிற்கிறன்.

தம்பி:—இவன் என்ன நன்மைகள் செய்வான்?

அண்ணன்:—வீதிகளில் போக்குவரத்தாய் இருக்கும் வண்டிகளுக்கு இடையூருய் மனிதர்கள் கும்பலாய் நின்றுகொண்டிரா வண்ணமும், வண்டிகளும் அவ்விதமே ஜனங்களுக்கு இடையூருய் வழிதவறி ஓட்டப்படாமலும் பார்த்துக்கொள்வான்.

தம்பி:—அப்படி இடையூறு செய்பவர்களை என்ன செய்வான்?

அண்ணன்:—அவர்களின் பெயர்களைக்கேட்டு எழுதி, மேல் அதிகாரிகளுக்கு செய்த குற்றத்தைத் தெரிவிப்பான்.

தம்பி:—அவர்கள் என்ன செய்வார்கள்?

அண்ணன்:—அவர்களை நியாயஸ்தலத்திற்கு வர அழைப்புச்சீட்டு அனுப்பி, குற்றத்தை விஜாரித்து அதற்குத்தக்கபடி அபராதம் முதலிய தண்டனை விதிப்பார்கள்.

தம்பி:—அப்படியானல் இவனுக்கு மேல் அதிகாரிகள் யாவர்?

அண்ணன்:—இவனுக்குமேல் சப்இன்ஸ்பெக்டர் சர்க்கில் இன்ஸ்பெக்டர், டிப்டிசூப்ரெண் டெண்ட், சூப்ரெண்டெண்ட் முதலிய அதிகாரிகள் உளர்.

தம்பி:—இவர்களில் யார் தண்டனை விதிப் பவர்கள்?

அண்ணன்:—தண்டனை விதிப்பதற்கு, குற்றத் திற்குத்தக்கப்படி, கௌரவமாஜிஸ்டிரேட், சப்மாஜிஸ்டிரேட், டிப்டிகலெக்டர், கலெக்டர், ஜட்ஜ் முதலியவர்கள் உளர்.

தம்பி:—இவனுக்கு இதுதான் வேலையோ?

அண்ணன்:—இதுமட்டுமன்று. ஜனங்கள் வீதி களில் அசுத்தம் செய்யாமலும், களவு, சச்சரவு, மோசம் முதலியவைகள் நடை பெறுமலும் பார்க்கவேண்டும்.

தம்பி:—இரவிலும் இங்கேயே நின்றுகொண் டிருப்பானு?

அண்ணன்:—இரவில் வண்டிகள் ஜனங்கள் முதலியவைகளின் நடமாட்டம் அதிகமாய் இராது. ஆனல் திருடர்களால் தீங்கு நேராவண்ணம் ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்துகொண்டு வீதிகள்தோறும் சுற்றிப் பார்த்துவருவான்.

தம்பி:—இவன் ஒருவன்தானே இருக்கிறன். திருடர்கள் பலர் இருந்தால் என்ன செய்வான்?

அண்ணன்:—அதோ பார்! அவன் பையில் ஓர் ஊதுகுழல் இருக்கிறது. அதை ஊதினல் அதைக் கேட்டவுடன் அருகிலுள்ள பல சேவகர்கள் அங்கு உதவிக்கு வருவார்கள்.

தம்பி:—திருடனை என்ன செய்வார்கள்?

அண்ணன்:—அவனை ஸ்டேஷனில் இரவு முழுதும் அடைத்துவைத்து மறுதினம் அவனை மாஜிஸ்டிரேட்டிடம் கொண்டு போவார்கள். அவர் திருடனை விஜாரித்து தண்டிப்பார்.

---




## 21. கண்ணப்பர்.

பல ஆண்டுகளுக்குமுன் மலைநாடு ஒன்றில் வேடர் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் நாகன். அவன் மனைவியின் பெயர் தத்தை. இவர்களுக்கு நெடுநாள்வரையில் பிள்ளை கிடையாது. பின்னர், தத்தை ஓர் ஆண்மகனை ஈன்றாள். அக்குழந்தை; திண்ணென்றிருந்தது. ஆகவே அதற்குத் திண்ணன் என்று பெயரிட்டார்கள்.

திண்ணனுக்குத் தக்க வயது வந்தது. ஒரு நாள் நாணன், காடன் என்ற இருவேடர்களுடன் காட்டிற்கு வேட்டையாடச் சென்ருன். அங்கு ஒரு பன்றி வேகமாய் ஓடுவதைக் கண்டான். அதன்பின் வெகுதூரம் ஓடி அதைத் தன் அம்பினுல் கொன்ருன்.

திண்ணனுக்கு அலேச்சல் மிகுதியால் அதிக தாகம் உண்டாயிற்று. அவன், காடனைப் பன்றியை வதக்கச்சொல்லிவிட்டு, தான் நாணனுடன் அருகிலுள்ள ஓர் மலே நதிக்குத் தண்ணீர் அருந்தச்சென்ருன். அந்நதிக்கரையிலுள்ள ஓர் மலேமீது ஓர் கோயிலேக்கண்டான். அக் கோயிலேப் பார்க்க அவாகொண்டான். நாண னுடன் அம்மலேமீது ஏறினுன். அங்குள்ள இலிங்கத்தைக் கண்டான்.

மலேமீது இருந்த இலிங்கத்தைக் கண்டதும் திண்ணனுக்குப் பக்தி மேலிட்டது. அவன் இலிங்கத்தைக்கட்டித் தழுவி "ஐயனே! சுவாமி! இங்கு தனியாய் இருக்கிறீரே! உமக்குத் துணே யாவர்? ஆகாரங்கொடுப்பவர் யார்?" என்று புலம்பினுன். பிறகு ஒருவாறு தேறி மலேயி னின்று கீழே இறங்கிக் காடன் இருக்குமிடம் வந்தான்.

காடன் இறைச்சிகளை வதக்கி வைத்திருந்தான். திண்ணன் அவற்றை ஒவ்வொன்றாய் மென்று சுவையுள்ளவைகளை ஒருகையில் எடுத்துக்கொண்டான். வாயில் கொஞ்சம், தண்ணீரை அடக்கிக் கொண்டான். சில பூக்களைக்கொய்து தலையில் வைத்துக்கொண்டான். வில்லை மறு கையில் வைத்துக்கொண்டு மலையின்மேல் ஏறினன். இலிங்கத்தின் மேலிருந்த பூக்களை காலால் தள்ளி வாயிலிருந்த நீரைத் தலையில் துப்பினன். தன் தலையிலிருக்கும் பூக்களை அதன் தலையில் சூட்டினன். கையிலிருந்த இறைச்சித்துண்டுகளை அதன் முன் வைத்து புசிக்கும்படி வேண்டினன்.

திண்ணனுடன் வந்தவர்கள் அவனை ஊருக்கு அழைத்தார்கள். அவன் பதிலுரையாதிருக்க இருவரும் இவன் தெய்வப்பயித்தியம் கொண்டான் என்று திரும்ப ஊருக்குச்சென்றார்கள். திண்ணன் வழக்கப்படி பூ, தண்ணீர், இறைச்சி இவைகளைக்கொண்டு படைத்து வந்தான்.

வழக்கப்படி பூசைசெய்யும் சிவகோசரியார் சுவாமியின் முன் இறைச்சி கிடப்பதைக் கண்டு வருந்தினர். ஐந்தாம்நாள் இரவில் சிவபெருமான் சிவகோசரியார் கனவில் தோன்றி "எனது

ஆலயத்தை அசுத்தப்படுத்துகிறவன் எனது பக்தன். நீ அவனை இகழாதே. நாளையதினம் மறைவில் இருந்து பார்." என்று கூறினர். அவரும் அப்படியே செய்தார். மறுதினம் வழக்கப்படி திண்ணன் பூசைசெய்ய வரும்போது சுவாமியின் வலக்கண்ணில் உதிரம் வரக்கண்டான். கண்டதும் திகில் அடைந்தான். கீழே விழுந்து புரண்டு, "ஐயோ! என்செய்வேன். யாரோ ஒருவன் சுவாமியின் கண்ணை புண் செய்துவிட்டானே!" என்று கதறினன். சில பச்சிலைகளைக் கொண்டு வந்து கண்ணில் பிழிந்தான். உதிரம் நிற்க வில்லை. உடனே தன் வலக்கண்ணைக் களைந்து சுவாமியின் வலக்கண்ணில் அப்பினன். உடனே சுவாமிக்குக் கண் சௌக்கியமாயிற்று.

பிறகு சுவாமியின் இடக்கண்ணில் இரத்தம் வரக்கண்டான். உடனே தன் காலை சுவாமியின் இடக்கண்ணில் ஊன்றிக்கொண்டு தனது இடக் கண்ணை எடுக்க எத்தனித்தான். உடனே சிவ பெருமான் திண்ணனுடைய கைகளைப்பிடித்துக் கொண்டு "கண்ணப்பா! நில்," என்று மும்முறை நவின்று நிறுத்தினர். "உனது கண் எனது கண்ணுகும். உன் பக்திக்கு மெச்சினேன்." என்று கூறி கண்ணப்பருக்கும் சிவகோசரியாருக்கும் காக்ஷிதந்து கைலாயத்திற்கு ஏகினர்.

பரமசிவனுடைய வேறு நாமங்கள் :--அரன், சங்கரன், உருத்திரன், மகேச்சுரன், கங்காதரன், சந்திரசேகரன், ஐம்முகன், முக்கண்ணன், நீலகண்டன், எண்டோளன், பினகபாணி, சூலபாணி, உமாபதி, ஈசானன், காலகாலன், மகாதேவன் முதலியனவாம்.

---

## 22. துஷ்டப்பையன்.

---

ஓர் ஊரில் ஒரு பிரபு இருந்தார். அவருக்குக் கண்ணன் என்னும் ஓர் பிள்ளை இருந்தான். அவன் மிகவும் துஷ்டன். தாய்தந்தையர் சொல்லைக் கேட்கமாட்டான். ஓர் நாள் அவன் தந்தை வெளியில் சென்றிருந்தார். செல்லும் போது மறதியாகத் தன் கடிகாரத்தை மேஜையின் மேல் வைத்துச்சென்றார். அவன் அதனைக் கையிலெடுத்தான். பிறகு அதைத்திறந்து பார்க்க விரும்பினன். அவன் தந்தை ஓர் கத்தியால் அதனைத் திறப்பது வழக்கம். இது இவனுக்குத் தெரியும். இவன் தன் தந்தையின் கத்தியை எடுத்துக் கடிகார மூடியில் குத்தினன். கத்தி வழுக்கி இவன் விரலில் பாய்ந்தது. உடனே இவன் கையில் பிடித்திருந்த கத்தியையும்




கடிகாரத்தையும் விட்டுவிட்டான். விலையுயர்ந்த அக்கடிகாரம் கீழே விழுந்து உடைந்தது. கத்தி திறந்தபடியே விழுந்து காலில் குத்திக் கொண்டது.

இவன் கையிலிருந்தும் காலிலிருந்தும் இரத்தம் ஒழுகிற்று. இவன் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் தந்தை உள் நுழைந்தார். கண்ணனின் செய்கைக்கு வருந்தினர். அவனைப்

பலவாறு கோபித்து, இனி தன் உத்திரவின்றி ஒரு காரியமும் செய்யக்கூடாது என்று நற்புத்தி கூறினர். கண்ணன் உடம்பு சௌக்கியமாக ஒருமாதம் பிடித்தது.

ஒருநாள் பிரபுவைக்காண ஓர் நண்பர் ஒரு மோட்டார் வண்டியில் வந்தார். அவர் வண்டியை நிறுத்திவிட்டு உள் நுழைந்தார். கண்ணன் மோட்டார் ஓட்டும் விதத்தை அநேகதடவை பார்த்திருக்கிறன். மோட்டார் அருகில் ஒருவரும் இல்லை என்று உணர்ந்தான். மோட்டாரை ஓட்ட வேண்டுமென்னும் ஆசை அவனைத் தூண்டிற்று. உடனே வண்டியிலேறி விசையைத் திருப்பினன். வண்டி விரைவாக ஓட ஆரம்பித்தது. அதை நிறுத்தும்விதம் அவனுக்குத் தெரியவில்லை. வண்டி ஓர் பெரிய மரத்தில் மோதி உடைந்தது. கண்ணன் கீழே விழுந்தான். அவனது கால் எலும்புகள் முறிந்தன. தன் தந்தையின் கட்டளையை கீழ்ப்படியாததற்காக வருந்தினன்.

பிறகு அவன் வைத்தியசாலைக்குக் கொண்டு போகப்பட்டான். அவன் குணமடைய ஆறு மாதகாலமாயிற்று. எனினும் அவன் நொண்டியானன். மற்ற பிள்ளைகள் சந்தோஷமாக ஆடிப் பாடி விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு வருத்தமடைந்தான்.

பிள்ளைகளே! கண்ணன்கதியைக் கவனித்தீர்களா! நீங்கள் தாய்தந்தையர் சொல்லைக்கேட்டு அவர்களுக்கு அடங்கி நடக்கவேண்டும்.

"தந்தைசொல் மிக்க மந்திரமில்லை."

---

## 23. துகாராம் சுவாமிகள்.

---

வட இந்தியாவில் பூனா நகரத்திற்குச் சமீபத்தில் தேகு என்ற ஓர் கிராமம் உளது. அதில் சுமார் முன்னூற்றிருபது ஆண்டுகளுக்குமுன் ஒரு சிறந்த ஞானி இருந்தார். அவர் பெயர் துகாராம். இவர் நற்குண நற்செய்கையில் ஒப்பற்றவர். பண்டரிநாதரிடம் இடைவிடாத உள்ளன்புகொண்டவர்.

துகாராம் இயற்கையில் வெகு ஏழை. அவரது குடும்பத்தார் வறுமையால் பீடிக்கப்பட்டபோதிலும் அவர் அக்கஷ்டத்தை ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. அவர் எப்போதும் பாண்டுரங்கனையே மனதில் நினைத்து தோத்திரங்கள் சொல்லிக்கொண்டு காலம்கழித்துவந்தார். இதையறிந்த அவ்வூரார் அவர் பஜனைசெய்யுமிடத்திற்குத் திரளாகப்போவது வழக்கம்.



அக்காலத்தில் அத்தேசம் சிவாஜி என்னும் பெயர்பூண்ட அரசனின் ஆளுகையிலிருந்தது. துகாராமின் தெய்வபக்தியின் பெருமை அரசன் செவிக்கு எட்டியது. அரசன் அப்பெரியாரைத் தரிசிக்க விரும்பி பஜனைக்கூடத்திற்குச் சென்று அவரை வணங்கினான். அவரது பக்தியைக் கண்டு வியந்து பயங்கினார். அபங்கம் எனப்

படும் அத்தோத்திரப் பாடல்களைக் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

அச்சமயம் டில்லிச் சக்கரவர்த்தியாகிய பாதுஷா சிவாஜியின் அரண்மனையை முற்றுகை போட்டான். இதை துகாராம் அறிந்தார். உடனே அவர் பாண்டுரங்கனை மனதில் தியானித்து சிவாஜியின் நாட்டைக் காக்கும்படி வேண்டினர். அப்படியே பாண்டுரங்கன் தான் சிவாஜியாக வேடம்பூண்டு பாதுஷாவை எதிர்த்து வென்றார்.

துகாராமின் அதிசயச்செயல்கள் நாடெல்லாம் பரவிற்று. பிறகு யாவரும் அவரை துகாராம் சுவாமி என்று அழைத்து வந்தார்கள். பிறகு அவர் இந்திராணி நதிக்கரையிலிருந்து பரமபதம் சேர்ந்தார்.

பக்தியின் சிறப்பை விளக்க துகாராமின் சரித்திரம் ஓர் சான்று ஆகும். வட இந்தியாவில் கபீர், நாமதேவர் முதலிய இவரைப்போன்ற பக்தர்கள் பலர் இருந்தார்கள். தென்னிந்தியாவிலும் நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்று அனேக பக்தர்கள் இருந்தார்கள். இவர்களைப்பற்றி நீங்கள் மேல் வகுப்புகளில் அறிவீர்கள்.

---

# 24. மணியார்டர்.

---

கோபாலன் :—“இராமா! எனக்குச் சில புத்தகங்கள் வேண்டும். அவை இந்த ஊரில் கிடைக்கவில்லை. அவற்றை வாங்கி அனுப்பச் சென்னையிலுள்ள என் மாமனுக்கு ரூபாய் ஐந்து அனுப்பவேண்டும். எவ்விதம் அனுப்புகிறது?”

இராமன்:—“கோபாலா! பணத்தைத் தபாலாபீஸ் மூலம் அனுப்பவேண்டும்.”

கோபாலன்:—"தபாலாபீஸ் மூலம் எவ்விதம் அனுப்புகிறது?"

இராமன்:—தபாலாபீஸுக்குப் போய் ஒரு மணியார்டர் பாரம் வாங்கிவா?

கோபாலன்:—அந்த பாரம் என்ன விலை?

இராமன்:—அதற்கு விலை கொடுக்கவேண்டியது இல்லை. தபாலாபீஸில் இனமாகவே கொடுப்பார்கள். என்னிடமே இதோ ஒரு பாரம் இருக்கிறது. இது தமிழ்ப் பாரம். எல்லா பாஷைகளிலும் இந்த பாரம் கிடைக்கும். இதில் இக்கோட்டின் கீழுள்ள குறிப்புகளைப் பூர்த்திசெய்.

கோபாலன்:—எல்லாக் குறிப்புகளையும் பூர்த்தி செய்துவிட்டேன். இதோ "கூபன்" என்று எழுதியிருக்கிறதே அது என்ன?

இராமன்:—அங்குள்ள காலியிடத்தில் நீ உன் மாமனுக்குத் தெரிவிக்கவேண்டிய சமாசாரத்தைக் குறிப்பாய் எழுது.

கோபாலன்:—எழுதியாய்விட்டது. பிறகு இந்த பாரத்தை என்ன செய்கிறது?

இராமன்:—இந்த பாரத்தையும் ஐந்து ரூபாய் இரண்டு அணாவையும் எடுத்துப்போய்

போஸ்ட்மாஸ்டரிடம் கொடு. அவர் அதைப் பெற்றுக்கொண்டு ஒரு ரசீது கொடுப்பார். அதை வாங்கிவா.

கோபாலன்:—ஐந்து ரூபாய்தான் அனுப்ப வேண்டும். எதற்காக இரண்டணு சேர்த்துக்கொடுக்கவேண்டும்?

இராமன்:—பணத்தை உன் மாமனிடம் தபாலாபீசார் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காகக் கூலி இரண்டணு.

கோபாலன்:—எவ்வளவு ரூபாய் அனுப்பினலும் கூலி இரண்டணுதானே?

இராமன்:—அல்ல, பத்து ரூபாய் வரையில் இரண்டணு. அதற்குமேல் இருபத்தைந்து ரூபாய் வரையில் நாலு அணு. ஐம்பது ரூபாய்க்கு எட்டு அணு. நூறு ரூபாய்க்கு ஒரு ரூபாய் என்று ஏற்பட்டிருக்கிறது.

கோபாலன்:—பாரத்தையும் பணத்தையும் தபாலாபீஸில் கொடுத்தால் எப்படி என் மாமனுக்குப் பணம் போய்ச் சேரும்?

இராமன்:—இந்த ஊர் தபாலாபீஸ் உத்தியோகஸ்தர்கள், இந்த பாரத்தைப் பத்திரமாய்

பட்டினத்துக்கு அனுப்பிவிடுவார்கள். உன் மாமனிடம் பணத்தையும் கூபன் துண்டையும் கொடுத்துவிடுவார்கள். உன் விலாசம் எழுதியிருக்கும் துண்டை உனக்குத் தபால்மூலம் திருப்பி அனுப்பி விடுவார்கள்.

கோபாலன்:—அத்துண்டை என் எனக்குத் திருப்பி அனுப்புவார்கள்?

இராமன்:—அத்துண்டின் பின்புறம் உன் மாமன் கையெழுத்து இருக்கும். அதைப் பார்த்து உன் மாமனிடம் பணம் பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்துவிட்டது என்று அறியலாம்.

கோபாலன்:—"இராமா" இன்று நன்றாய் மணியார்டர் செய்யும் விதம் உன்னிடம் அறிந்தேன். போய்வருகிறேன் வந்தனம்.

---

## 25. காரைக்காலம்மையார்.

---

பல ஆண்டுகளுக்கு முன் காரைக்கால் என்னும் பட்டினத்தில் தனதத்தன் என்னும் பெயர்வாய்ந்த ஒரு வைசியன் இருந்தான். அவன் மிக்க தனவந்தன். அவனுக்குப் புநிதவதி என்று ஓர் பெண் இருந்தது. தனதத்தன்

தனது குமாரியை நாகப்பட்டினத்திலிருந்த பரம தத்தன் என்னும் ஓர் சைவச் சிறுவனுக்கு மணம் புரிவித்தான். தனதத்தனுக்குப் புநிதவதியைத் தவிர வேறு குழந்தை இல்லை. ஆகையால் அவனுக்குத் தன் மகளை விட்டுப்பிரிய மனமில்லை. அவன் தன் மருமகனைக் காரைக்காலிலேயே இருக்கச் செய்தான்.



பரமதத்தனும் புநிதவதியும் காரைக்காலில் சுகமாய் இல்லறம் நடத்திவந்தார்கள். புநிதவதி

மிருந்த தெய்வ பக்தியுள்ளவள். வீட்டு வேலைகள் செய்து ஒழிந்த நேரமெல்லாம் ஈசனையே தியானம் செய்துகொண்டிருப்பாள்.

ஒரு நாள் பரமதத்தனைக்காண அவனுடைய சிநேகிதரில் ஒருவன் வந்தான். அவன் இரு மாம்பழங்களைப் பரமதத்தனுக்குக் கொடுத்தான். பரமதத்தன் அவ்விரு பழங்களையும், தன் மனைவியிடம் கொடுத்துவிட்டுத் தன் நண்பனுடன் வெளியே சென்றான்.

பரமதத்தன் வெளியே சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் ஒருவன் பரமதத்தனுடைய வீட்டிற்கு வந்தான். புநிதவதி அவனை "யார்? என்னகாரியமாய் இங்கு வந்தீர்!" என்று அன்புடன் வினவினாள். அவன் "அம்மையே! பசி எனக்குக் காதை அடைக்கிறது. எனக்குக் கொஞ்சம் உணவு வேண்டும்" என்றான். உடனே புநிதவதி, அவனை ஆதரவாய் அழைப்பித்து சிறிது அன்னமும், கணவன் கொடுத்திருந்த மாங்கனிகளில் ஒன்றையும் அவனுக்குக் கொடுத்தாள். அவன் அவற்றையுண்டு பசி தீர்ந்து புநிதவதியை ஆசீர்வதித்துச் சென்றான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வெளியே சென்றிருந்த பரமதத்தன் திரும்பி வீடுவந்து

சேர்ந்து உண்பதற்கு ஆயத்தமானுன். புநிதவதி தனது நாயகனுக்கு உணவுடன் மிருந்திருந்த மாங்கனியையும் அன்புடன் அளித்தாள். பரம தத்தன் மாங்கனியை முதலில் உண்டான். அது மிக இனிப்பாய் இருந்தது. மற்ருெரு பழத்தை யும் கொண்டுவரச் சொன்னுன். புநிதவதி திகைத்து உள்ளே சென்ருள். மிக்க தெய்வ பக்தியுள்ளவள் ஆகையால் ஈசனைத் தன் கணவன் உண்ண ஒரு மாங்கனி தரவேண்டுமென்று வேண்டித் தன் கைகளை ஏந்தினுள். அவள் கையில் ஈசனருளால் ஒரு பழம் விழுந்தது. அதைக்கொண்டுபோய்க் கணவனிடம் கொடுத் தாள். அதை அவன் உண்டான். அது அவன் முன் தின்ற பழத்தைவிட உருசியாய் இருந்தது. அவன் தன் மனைவியை நோக்கி "இப்பழம் ஏது? இது நான் கொடுத்தபழம் இல்லை. வேறு பழம்போல் இருக்கிறதே" என்று வினவினுன்.

புநிதவதியின் மனதில் குழப்பம் உண்டா யிற்று. தன் கணவனிடம் உண்மையைச் சொல்லவும் அஞ்சினுள். ஆனுல் பொய்சொல்ல அவளுக்கு மனமில்லை. கணவனிடம் ஒருகாலும் பொய் புகலலாகாது என்று தீர்மானித்து "என் ஆருயிர் நாயக! நீர் வெளியே சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் ஒருவன் பசியோடு வந்து

சிறிது உணவு யாசித்தான். நான் தாங்கள் கொடுத்த இரு பழங்களில் ஒன்றை அவனுக்குக் கொடுத்தேன். மற்ரென்றை தங்களுக்கு இட்டேன். தாங்கள் இரண்டாவது பழம் உண்ண விரும்பியதால் நான் ஈசனை வேண்டினேன். அவன் இப்பழம் தந்தருளினன் " என்ருள்.

பரமதத்தன் இச்செய்தியை நம்பாது தன் மனைவியை நோக்கி " நீ கூறுவது உண்மையாயின் ஈசனிடமிருந்து இன்னும் ஓர் பழம் என் முன் வரவழை " என்ருன். புநிதவதியும் அதற்கு இசைந்து ஈசனை மறுமுறை வேண்டினள். ஒரு மாங்கனி அவள் கையில் தோன்றிற்று. அதைத் தன் கணவனிடம் கொடுத்தாள். அவன் ஆசையுடன் அதைக் கையிலேந்தினன்.

பரமதத்தன் அப்பழத்தைத் தன் கையில் ஏந்தினவுடன் அப்பழம் மாயமாய் மறைந்தது. இதைக்கண்டு அவன் மதிமயங்கினன். மேலும் அவன் தன்னுடைய மனைவி ஓர் தெய்வப்பெண் என்றும் அவளோடு வாழ்தல் தகாது என்றும் எண்ணங்கொண்டான்.

ஒரு நாள் திடீரென்று தன் மனைவி அறியாமல் வேறு ஊருக்குப் போய்விட்டான். அங்கு வியாபாரம் செய்ய ஆரம்பித்தான். வேறு ஒரு பெண்ணையும் கலியாணம் செய்துகொண்டான்.

புநிதவதி காரைக்காலிலேயே தனியாக வாழ்ந்துவந்தாள். அவளுடைய உறவினர்கள் பரமதத்தன் போனவிடந் தெரியாது வருந்தினார்கள். கடைசியாக அவன் மதுரை நகரில் வியாபாரஞ் செய்கிறானென்பதை அறிந்தார்கள். உடனே அவர்கள் புநிதவதியை அழைத்துக் கொண்டு மதுரை நகருக்கு பரமதத்தன் இருக்குமிடந் தேடி அடைந்தார்கள். அவர்கள் அவனைப் புநிதவதியோடு இருந்து வாழும்படி வேண்டினார்கள். அதற்கு அவன் "நான் இவளுடன் வாழ அச்சங்கொண்டு இங்கு வந்தேன் இவள் மானிடப்பெண் அல்லள்: தெய்வப்பெண். இவளோடு வாழ்தல் தகாது." என்று கூறி அவள் மாங்கனியை வரவழைத்த விருத்தாந்தத்தையும் விளம்பரப்படுத்தினான்.

புநிதவதியும் அவளுடைய உறவினர்களும் ஊருக்குத் திரும்பிவிட்டார்கள். புநிதவதி தனியாகவே தன் வாழ்நாள் முழுதும் ஈசனைத் துதிப்பதிலேயே காலங்கழித்துவந்தாள். இவளுடைய பக்தியின் சிறப்பு ஊர் எல்லாம் பரவிற்று. இவள் காரைக்காலில் பிறந்ததுபற்றி இவளைக் காரைக்காலம்மையார் என்று யாவரும் சொல்லுவது வழக்கமாயிற்று.

---

# கொன்றைவேந்தன்.

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.

1. அன்னையும் பிதாவும் முன் அறி தெய்வம்
2. ஆலயந் தொழுவது சாலவும் நன்று
3. இல்லறம் அல்லது நல்லறம் அன்று
4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வார்
5. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு
6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்
7. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்
8. ஏவா மக்கள் மூவா மருந்து
9. ஐயம் புகினுஞ் செய்வன செய்
10. ஒருவனைப் பற்றி ஓரகத்திரு
11. ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்
12. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு
13. அஃகமும் காசும் சிக்கெனத் தேடு
14. கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை
15. காவல் தானே பாவையர்க் கழகு
16. கிட்டா தாயின் வெட்டென மற
17. கீழோ ராயினும் தாழ வுரை
18. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை
19. கூரம் பாயினும் வீரியம் பேசேல்

20. கெடுவது செய்யின் விடுவது கருமம்
21. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை
22. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி
23. கொற்றவன் அறிதல் உற்றிடத் துதவி
24. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு
25. கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை
26. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை
27. சான்றோர் என்கை ஈன்றோர்க் கழகு
28. சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு
29. சீரைத் தேடின் ஏரைத் தேடு
30. சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்
31. சூதும் வாதும் வேதனை செய்யும்
32. செய்தவம் மறந்தால் கைதவம் ஆளும்
33. சேமம் புகினும் சாமத் துறங்கு
34. சையொத் திருந்தால் ஐய மிட்டுண்
35. சொக்கர் என்பவர் அத்தம் பெறுவர்
36. சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்
37. தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை
38. தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை
39. திரைகடல் ஓடியும் திரவியம் தேடு
40. தீராக் கோபம் போராய் முடியும்
41. துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு
42. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்
43. தெய்வம் சீறின் கைதவ மாளும்
44. தேடா தழிக்கின் பாடா முடியும்

45. தையும் மாசியும் வையகத் துறங்கு
46. தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது
47. தோழனோடும் ஏழைமை பேசேல்
48. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்
49. நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை
50. நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை
51. நீரகம் பொருந்திய ஊரகத் திரு
52. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி
53. நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு
54. நெஞ்சை யொளித்தொரு வஞ்சகம் இல்லை
55. நேரா நோன்பு சீரா காது
56. நைபவர் எனினு நொய்ய உரையேல்
57. நொய்யவர் என்பவர் வெய்யவர் ஆவர்
58. நோன் பென்பது கொன்று தின்னுமை
59. பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்
60. பாலோ டாயினும் காலம் அறிந்துண்
61. பீரம் பேணி பாரந் தாங்கும்
62. புலையும் கொலையும் களவும் தவிர்
63. பூரியோர்க் கில்லை சீரிய ஒழுக்கம்
64. பெற்றோர்க் கில்லை சுற்றமும் சினமும்
65. பேதைமை என்பது மாதர்க் கணிகலம்
66. பையச் சென்றால் வையம் தாங்கும்
67. பொல்லாங் கென்பவை எல்லாம் தவிர்
68. போனகம் என்பது தானுழந் துண்டல்
69. மருந்தே யாயினும் விருந்தோ டுண்

70. மாரி யல்லது காரிய மில்லை
71. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை
72. மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது
73. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்
74. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்
75. மேத்தையிற் படுத்தல் நித்திரைக் கழகு
76. மேழிச் செல்வம் கோழை படாது
77. மொழிவது மறக்கின் அழிவது கருமம்
78. மோனம் என்பது ஞான வரம்பு
79. வளவ னாயினும் அளவறிந் தழித்துண்
80. வானஞ் சுருங்கின் தானம் சுருங்கும்
81. விருந்திலோர்க் கில்லை பொருந்திய ஒழுக்கம்
82. வீரன் கேண்மை கூரம் பாகும்
83. உரவோர் என்கை இரவா திருத்தல்
84. ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு
85. வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை
86. வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை
87. வையந் தோறும் தெய்வந் தொழு
88. ஒத்த இடத்து நித்திரை கொள்
89. ஓதாதார்க் கில்லை உணர்வோடு ஒழுக்கம்

முற்றிற்று.



தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகம், கரந்தை.